# COME POST

வருட சந்தா ரூ. 60/-  தனிப்பிரதி ரூ. 5/-
VOLUME 2  MARCH 2021  ISSUE 11

COME

நன்மை செய்கிறதில் சோர்ந்து
போகாமல் இருப்போமாக;
நாம் தளர்ந்து போகாதிருந்தால்
ஏற்றகாலத்தில் அறுப்போம். கலாத்தியர் 6:9




The Tamil Newsletter of
Christian Outreach for Mission and Evangelism
Address: No. 9/5A, Bajanai Koil First Street, Villivakkam,
Chennai-600 049. India. Phone : 044-26171846
Cell : 8951414480 E-mail: comeministries@gmail.com

# பொதுச் செயலரிடமிருந்து...



கிறிஸ்துவுக்குள் மிகவும் பிரியமான எனதருமை சகோதர சகோதரிகளே, நம் ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் உங்கள் ஒவ்வொருவரையும் வாழ்த்துகின்றேன். சவால்கள் நிறைந்த 2020 ஆம் ஆண்டை கடந்து 2021 ஆம் ஆண்டில் பிரவேசிக்கவும், இரண்டு மாதங்களைக் கடந்து மூன்றாம் மாதத்தில் அடியெடுத்துவைக்கவும் கிருபை பாராட்டின கர்த்தரை ஸ்தோத்தரிப்போம்.

"மிகவும் சிறியவராகிய என் சகோதரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச்செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்". (மத்தேயு 25:40)

கடந்த மாதத்தில் சென்னை, பெங்களூரு, ஒசூர் ஆகிய மூன்று பட்டணங்களில் பணித்தள மக்களை சந்திக்கவும், தேவனுடைய நற்செய்தியை அறிவிக்கவும் அருள்புரிந்த ஆண்டவரைத் துதிக்கின்றேன்.

**கர்த்தரைத் துதித்து ஜெபிப்போம்**

பெங்களூரில் உள்ள சீஷத்துவ மையத்தில் பயிலும் நான்கு தம்பிமார்கள் NIOS தேர்வு எழுத கர்த்தர் கிருபை பாராட்டினார். அநேக தடைகள் வந்தபோதும், ஆண்டவருடைய கரம் பிள்ளைகள் மேல் இருந்ததற்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறேன். இவர்கள் நல்ல மதிப்பெண்கள் பெற்று தேர்ச்சி அடைய கர்த்தரிடம் மன்றாடுவோம்.

பெங்களூரு பணிதளங்களில். வறுமையில் வாடினாலும் எப்படியாவது படிக்க வேண்டும் என்ற ஏக்கத்தோடு வாடிய பணித்தள பெண் பிள்ளைகளில் ஒருவரை PU இரண்டாம் ஆண்டிலும் நான்கு பேரை PU முதலாம் ஆண்டிலும் சேர்த்து ஆதரிக்கப்படுகிறார்கள். இவர்கள் கர்த்தருக்கு பயந்து ஒழுக்கமாய் வாழவும், பரிசுத்தத்தை காத்துக்கொள்ளவும், கல்வியில் சிறந்து விளங்கவும் கர்த்தரிடம் மன்றாடுவோம்.

இங்கு தங்கி பயிலும் மாணவிகள் மிகவும் ஏழ்மை நிலைமையிலும், ஆதரவற்ற நிலைமையிலும் இருந்து வந்திருப்பதால் COME இயக்கமே பொறுப்பெடுத்துள்ளது. எனவே, ஒரு மாணவிக்கு மாதமொன்றிற்கு சராசரியாக ரூபாய் 4000/- வரை தேவைப்படுகின்றது. ஜெபியுங்கள், கர்த்தர் ஏவுவாரானால் தாங்க முன்வாருங்கள்.



**ஒசூரில் உன்னதரின் மகிமை**

கடந்த மாதத்தில் ஒசூர் பணித்தளங்களில் நடைபெற்ற சிறப்புக் கூடுகைகளில் தேவசெய்தியை பகிர்ந்து கொள்ள கர்த்தர் கிருபையருளினார். இக்கூடுகைகளில் பங்குபெற்ற மக்களில் அநேகர் கர்த்தர் தங்களுக்கு செய்த நன்மைகளை சாட்சியாய் பகிர்ந்து கொண்டனர். அதில் ஒரு சாட்சியை தேவனுடைய நாமத்திற்கு மகிமையாக கீழே பிரசுரிக்கிறேன். வாசித்து நாம் தேவனை மகிமைப்படுத்துவோமாக.

"என்னுடைய பெயர் கோவிந்தம்மாள். என்னுடைய கணவர் பெயர் சேட்டு. வயது 30 நாங்கள் திருமணமாகி பெங்களூரிலுள்ள ஹனுமந்தபுரம் குடிசைப்பகுதியில் வசித்து வருகிறோம். எனக்கு திருமணமான நாளிலிருந்து என்னுடைய கணவருடன் நான் சமாதானமாக வாழ்ந்ததே இல்லை. எப்பொழுது பார்த்தாலும் என் வீட்டில் சண்டையும் சச்சரவும் தான். என்னுடைய கணவர் எப்போதும் குடித்துவிட்டு தீய நண்பர்களுடன் சேர்ந்து ஊர் சுற்றிக்கொண்டிருப்பார். திருமணமோ அல்லது மரணமோ எந்த இடத்தில் ஏற்பட்டாலும், அந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு அவர் நடனம் ஆடிக்கொண்டிருப்பார். இதுதான் அவருடைய வேலை. இத்தகைய காரியங்களில் ஈடுபட்டு தன்னுடைய சரீரத்தை அழித்துக் கொண்டு வந்தார். திடீரென்று அவரால் நடக்க முடியாமல் பெலவீனப்பட்டார். அவருடைய இடுப்பு எலும்பு தேய்வினால் அதிக வயதானவர் போல குனிந்து கொண்டு ஊர்ந்து போக ஆரம்பித்தார். நாங்கள் மிகவும் வேதனையுடன் இருந்த போது எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்கள் எங்களை சந்தித்தார்கள். ஆண்டவருடைய அன்பையும் அவர் செய்த அற்புதங்களையும் எடுத்துச் சொல்லி எங்களுக்காக ஜெபித்தார்கள். தொடர்ந்து வந்து எங்களை சந்தித்து ஜெபித்தார்கள். எங்கள்மேல் கரிசனை கொண்டு, பெங்களூரிலுள்ள பாப்டிஸ்ட் மருத்துவமனைக்கு அழைத்து சென்று சிகிச்சைக்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள். என்னுடைய கணவருக்கு அறுவை சிகிச்சை முடிந்து பரிபூரண சுகமடைந்து எழுந்து நடக்கவும், தன்னுடைய காரியங்களை தானாகச் செய்யவும் தேவன் பெலன் கொடுத்தார். இப்பொழுது அவர் அதிகாலை 4 மணிக்கெல்லாம் எழுந்து வேதம் வாசித்து, ஆண்டவருடைய பாடல்களை பாடி ஜெபிக்கவும் செய்கிறார். இப்பொழுது அவர் அனைத்து தீயப் பழக்கங்களையும் விட்டுவிட்டு இயேசுவினுடைய பிள்ளையாய் மாறியுள்ளார். நன்மையான காரியங்களைச் செய்த இயேசு சாமி தான் உண்மையான தெய்வம். எங்கள் உயிர் உள்ளவரை அவரையே நாங்கள் வணங்குவோம்.

**வேனிற்கால வேதாகமப் பள்ளி (VBS)**

மாநகரக் குடிசைப்பகுதிகளில் ஆயிரம் ஆயிரமான சிறுவர்கள் வறுமையிலும், தரித்திரத்திலும் எதிர்காலத்தைக் குறித்த நம்பிக்கையின்றி வாழ்ந்துவருகின்றனர். இவர்கள் மீது ஒருவரும் அக்கறை கொள்வதுமில்லை, உதவுவதும், கண்ணோக்கிப் பார்ப்பதுமில்லை. COME ஊழியங்கள் நடத்தும் V B S - ன் மூலம் இவர்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியையும், தன்னம்பிக்கையையும் கொடுப்பதுடன், இவர்கள் வாழும் பகுதிகளை விழாகோலமாக மாற்றுவதோடல்லாமல் பணித்தளமக்களின் வாழ்க்கையில் பெரும் மாற்றத்தையும் கொண்டுவருகிறது. V B S ஊழியத்தின் மூலம் ஆத்துமாக்களை ஆதாயப்படுத்த கர்த்தர் நமக்கு இன்னும் ஒரு நல்ல தருணத்தை ஏற்படுத்தித் தந்திருக்கிறார். கடந்த வருடம் கோவிட் கக தாக்குதலினால் தடைப்பட்டுப் போன விடுமுறை வேதாகமப் பள்ளி கர்த்தருடைய பெரிதான கிருபையினால் டிசம்பர் மாதத்தில் 1 1 4 பணித்தளங்களில் நடத்தி முடிக்கப்பட்டது. எஞ்சியுள்ள 138 பணித்தளங்களில் வருகின்ற ஏப்ரல் மாதத்தில் நடத்த ஜெபத்துடன் திட்டமிட்டிருக்கிறோம். இந்த ஆண்டின் VBS ஊழியம் தங்குதடையின்றி நடைபெறவும், கலந்துகொள்ளும் ஒவ்வொருவரும் தேவனுடைய வார்த்தையினால் தொடப்பட்டவும், பொருளாதாரத் தேவைகள் சந்திக்கப்படவும், தேவையான அளவிற்கு ஆசிரியர்களும், தன்னார்வ ஊழியர்களும் தேவனால் தந்தருளப்படவும் நாம் ஜெபிப்போமாக! இவ்வூழியத்தில் நீங்களும் கலந்துகொள்ளுங்கள். மற்றவர்களுக்கும் அறிவியுங்கள்.

எங்களின் பங்காளர்களாக; உதாரத்துவமான காணிக்கைகளினாலும், ஜெபத்தினாலும் எங்களைத் தாங்கிவரும் உங்கள் ஒவ்வொருவரையும் கர்த்தர்தாமே ஆசீர்வதிப்பாராக! ஆமென்.

கிறிஸ்துவுக்குள் உங்கள் அன்பு சகோதரன்,


**(தி. வெஸ்லி நவராஜ்)**
ஆசிரியர் மற்றும் பொதுச்செயலர்
அலைபேசி எண் : 8951414480, 9590012325



| | | |
|---|---|---|
| CONTACT : | D. WESLEY NAVARAJ | 8939000654, 8951414480 |
| | J. THOMAS | 8939000429, 9840297415 |
| | J. FREDERICK MULLER | 8939000887 |




# ஆத்தும மன்னா
# போராட்டமும் பொற்கிரீடமும்!

**பொதுவான போராட்டம்**

வாழ்க்கை என்றால் என்ன? என்று பொதுவாகக்கேட்கப்பட்டால், அதற்குப் பதில், "போராட்டம்" என்பது அனுபவரீதியில் உண்மையாக இருக்கும். மண்ணில் பிறந்த மனிதன் தான் பிறந்ததிலிருந்து ஒவ்வொரு காலகட்டத்திலும் போராடிக்கொண்டே வாழ்கிறான். தாயின் வயிற்றிலிருந்து வெளிப்பட்டதும் பிஞ்சுக்குழந்தை அழுகின்றது. உலகத்தின் காற்று, தட்பவெட்பம், சுற்றுப்புறச் சூழ்நிலை ஆகியவற்றுடன் குழந்தை போராடுவதையே அதன் அழுகை வெளிப்படுத்துகின்றது; சற்று வளர்ந்து தவழ முயற்சிக்கும்போது தரையுடன் போராடுகின்றது; நடக்க முயற்சிக்கும் போது சுவருடன் போராடுகின்றது; பள்ளிக்கூடம் செல்ல வேண்டிய பருவம் வந்ததும், போக மாட்டேன் என்று அடம்பிடித்து அம்மாவுடன் போராடுகின்றது; படிப்புக் காலத்தில் பரிட்சைகளுடன் போராடுகின்றான்; குடும்பம் ஒன்று உருவானபின் குடும்பப் பிரச்சினைகளுடன் போராடுகிறான்; முதிர் வயதில் மரண பயத்துடன் போராடுகிறான். இவ்வாறாக, மனிதனுடைய வாழ்க்கை போராட்டத்திலேயே தொடங்கி, போராட்டத்திலேயே முடிவடைகின்றது. இது பொதுவாக எல்லா மனிதருக்கும் உலகத்தில் ஏற்படுகின்ற ஒன்று தான்.

**கிறிஸ்தவர்களுக்கு வருகின்ற சிறப்பான போராட்டம்:**

ஆதாமின் சந்ததியில் ஜென்ம பாவியாய்ப் பிறந்த மனிதன், தனது பாவத்திலிருந்து விடுதலை பெற பாவநாசகராம் இயேசுகிறிஸ்துவை அண்டிக் கொண்டு அவரது ஆளுகைக்குத் தன்னை அர்ப்பணிக்கும் போது, அவனுடைய இருதயம் அவருடைய ஆவியானவரின் (பரிசுத்த ஆவியானவரின்) ஆலயமாய் மாற்றம் பெறுகின்றது (1 கொரி 3 : 1 6 ). ஆவியானவரால் நடத்தப்படுகின்ற ஆவிக்குரியவனாக அவன் மாறுகின்றான். ஒருவன் ஆவிக்குரியவனாய் மாறும்போது, அவன் மேற்கண்ட பொதுவான போராட்டங்களுடன், பிசாசு, உலகம் தனது சொந்த சரீரம் ஆகிய மூன்று மிகப்பெரிய எதிரிகளின் போராட்டங்களையும் சந்திக்க வேண்டியவனாகிறான். ஆவிக்குரியவர்களாகிய கிறிஸ்தவர்களுக்கு இம் மூன்று எதிரிகளிலும் சரீரமே பிரதான எதிரியாய் மாறுகின்றது.

**இயேசுவும் போராட்டமும்**

இயேசு கிறிஸ்து, தமது மீட்பின் ஊழியத்தை உலகத்தில் தொடங்கியதும் சாத்தானும், உலகமும் அவருடன் போராட்டத்தைத் தொடங்கின. இயேசு வனாந்திரத்தில் தனிமையாக இருந்த நாற்பதுநாளளவும் சாத்தான் அவரோடு போராடினான். மூன்றரை ஆண்டு கால ஊழியம் முழுவதிலும், சிலுவை மரணம் வரையிலும் போராடிக்கொண்டிருந்தான். இறுதியில், பிதாவின் கைகளில் தமது ஆவியை ஒப்புவித்து, சாத்தானை முற்றிலும் தோற்கடித்தார். சாத்தான் கொண்டுவந்த எல்லா விதமான போராட்டங்களையும் இயேசு முழுமையாக வென்றார்.

இயேசுவின் ஊழியப்பாதையில் உலகமும் அவருடன் போராடிக் கொண்டே இருந்தது. நரிகளுக்குக் குழிகளையும், பறவைகளுக்குக் கூடுகட்ட மரங்களையும் கொடுக்கின்ற உலகம், இயேசுவுக்குத் தலை சாய்ப்பதற்குக்கூட பூமியில இடம் கொடுக்க வில்லை (லூக்கா 9:58). உலகம் தன்னை ஆளுகின்ற அதிகார வர்க்கத்தினரை ஆண்டவருக்கு எதிராக எழுப்பி, அவர்கள் மூலம் ஆண்டவருடன் போராடிக்கொண்டே இருந்தது. இறுதியில், தாம் உலகத்தானல்ல (யோவான் 17:16) என்று கூறி உலகத்தை ஜெயித்தார் இயேசு (யோவான்16:33).

இயேசு கிறிஸ்துவின் சரீரம் அவருக்கு எதிராகக் கிரியை செய்யவில்லை. ஏனெனில், கணவன் மனைவி சேர்க்கையினால் கருவுற்று இயேசு பிறக்காமல், ஆவியாயிருந்த அவரே மரியாளின் வயிற்றில் சிசுவாய் உருவாகிப் பிறந்ததினால் பிறக்கும்போதே பாவமில்லாத பரிசுத்தராய்ப் பிறந்தார். பரிசுத்தராய் வாழ்ந்தார். உலகத்தால் எழுப்பி விடப்பட்ட தமது எதிராளிகளைப் பார்த்து, **"என்னிடத்தில் பாவம் உண்டென்று உங்களில் யார் என்னைக் குற்றப்படுத்தக் கூடும்?"** (யோவான் 8:46) என்று வெளியரங்கமாய் வினவினார்.

**பவுலும் போராட்டங்களும்**

பவுல் என்று பெயர் மாற்றம் பெறுவதற்கு முன் யூத மார்க்கத்தினனாக இருந்த சவுல், யூதரிடையேயும் உரோமரிடையேயும் பேரும் புகழும் பெற்றவனாக விளங்கினான். யூத மார்க்கத்தின் பாதுகாப்பாளன் என்று புகழப்பட்டான். ஆனால், கிறிஸ்தவர்களைத் துன்புறுத்துவதற்காகத் தமஸ்குவுக்குப் போகும் வழியில் கிறிஸ்துவால் அவன் ஆட்கொள்ளப்பட்ட அந்த நேரத்திலிருந்து சாத்தானும், உலகமும், அவனது சரீரமும் அவனுடன் போராடத் தொடங்கின. சாத்தான் தனக்குக் கொடுத்த போராட்டங்களை முன்னிட்டு, **"இப்பிரபஞ்சத்தின் அந்தகார லோகாதிபதிகளோடும், வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் நமக்குப் போராட்டம் உண்டு"** என்று (எபேசியர் 6 : 12) எழுதியிருக்கிறார். கிறிஸ்தவர்களோடு பிசாசு தொடுக்கும் போராட்டத்தைக் குறித்து, **"தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருங்கள், விழித்திருங்கள்; ஏனெனில், உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல் எவனை விழுங்கலாமோ என்று வகைதேடிச் சுற்றித்திரிகிறான்"**. (1 பேதுரு 5:8) என்று எழுதியிருக்கின்றார்.

உலகம் தன்னுடன் போராடியதைக் குறித்துப் பவுல் கூறும்போது, **"நான் அதிகமாய் அடிபட்டவன், அதிகமாய்க் காவல்களில் வைக்கப்பட்டவன், அநேகந்தரம் மரண அவதியில் அகப்பட்டவன். யூதர்களால் ஒன்றுகுறைய நாற்பதடியாக ஐந்துதரம் அடிபட்டேன்; மூன்றுதரம் மிலாறுகளால் அடிபட்டேன், ஒருதரம் கல்லெறியுண்டேன், மூன்றுதரம் கப்பற்சேதத்தில் இருந்தேன்..."** (2கொரி11:23-27) என்று விவரித்துக் கொண்டே போகிறார்.

பவுல் தனது ஊழியப்பாதை முழுவதிலும் தனது சொந்த சரீரத்தோடு போராடிக் கொண்டே இருந்தார். மாம்சத்திற்கும் ஆவிக்கும் இடையே ஏற்படுகின்ற போராட்டத்தைக் குறித்துக் கூறும்போது, **"மாம்சம் ஆவிக்கு விரோதமாகவும், ஆவி மாம்சத்துக்கு விரோதமாகவும் இச்சிக்கிறது"** என்றும், மாம்சத்தின் கிரியைகள் எவை? ஆவியின் கனிகள் எவை என்பதையும் கலாத்தியர் 5 :17லிருந்து 23 வரையிலான வசனங்களில் வெளிப்படுத்துகிறார்.

மேலும், பவுலுடைய சரீரத்தில் ஒரு முள் (வியாதி) இருந்ததாகவும், அது இறுதி வரை அவருடன் போராடிக்கொண்டே இருந்ததாகவும் 2 கொரிந்தியர் 12:7-9 லிருந்து அறிகிறோம்.

**நமது வாழ்வில் போராட்டம்**

ஆவிக்குரிய வாழ்க்கையில் நமக்குப் போராட்டங்களைக் கொண்டு வருகின்ற பிசாசு, உலகம், நமது சரீரம் ஆகிய மூன்று எதிரிகளில் சரீரம் பிரதான எதிரியாகும். பிசாசும் உலகமும் வெளியில் நின்று போர் தொடுக்கும். ஆனால் நமது சரீரமோ, ஆவியுடன் உள்ளிருந்தே போர் தொடுக்கும். **ஒருவன் தன்னை ஒரு பொருட்டாக எண்ணும்படி அவனுக்கு**

ஆலோசனை கொடுப்பது அவனது சரீரமேயாகும். இந்த எண்ணம் அவனுக்குள் பெருமை, ஆணவம், அகந்தை, மனமேட்டிமை முதலியவற்றை ஏற்படுத்திவிடும். ஆவிக்கு விரோதமான இந்த குணாதிசயங்கள் 17 விதமான பாவங்களை மனிதனிலிருந்து உருவாக்கி அவனை அழித்து விடும் என்று கலாத்தியர் 5:19-21 வசனங்கள் வெளிப்படுத்துகின்றன.

அன்பார்ந்தவர்களே, ஆவிக்குரிய வாழ்க்கைக்கு விரோதமாக "நான்" என்ற பெருமையை நம்மில் ஏற்படுத்துகின்ற நமது சரீரத்தைப் பரிசுத்தமும், தேவனுக்குப் பிரியமுமான ஜீவப் பலியாக ஒப்புக் கொடுப்பதற்காகவே இத்தியான நாட்களை நமது வாழ்க்கையில் கர்த்தர் கூட்டிக் கொடுத்திருக்கிறார். (ரோமர்க2:1) கர்த்தருடைய திருசித்தத்திற்கு நம்மை அர்ப்பணிப்போமா?

**நல்ல போராட்டம்**

"நல்ல போராட்டத்தைப் போராடினேன், ஓட்டத்தை முடித்தேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன். இதுமுதல் நீதியின் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது, நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளிலே அதை எனக்குத் தந்தருளுவார்; எனக்கு மாத்திரமல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பும் யாவருக்கும் அதைத் தந்தருளுவார். (2 தீமோத்தேயு 4 :7 ,8 ) என்ற வசனங்களிலிருந்து பவுல் தான் சந்தித்த அனைத்து போராட்டங்களையும் நல்ல போராட்டமாகவே பவுல் ஏற்றுக்கொண்டுள்ளதாக அறிவிக்கிறார். எத்தனை அருமையான ஆவிக்குரிய உண்மை இது!

பிரியமானவர்களே, **இங்கே (உலகத்திலே) பாடுபட்டால் தான் அங்கே (பரலோகத்திலே) ஆளுகை செய்ய முடியும். இங்கே சிலுவை சுமந்தால் தான் அங்கே கிரீடம் சுமக்க முடியும் இங்கே போராட்டத்தை சந்தித்தால்தான் அங்கே ஜெயக்கொடி பிடிக்க முடியும்.** எனவே கிறிஸ்தவ வாழ்க்கையில் சந்திக்கும் போராட்டங்களை நல்ல போராட்டங்களாக எண்ணுவோம்; பரிசுத்த ஆவியானவரின் பெலத்துடன் கடைசி மட்டும் போராடுவோம்; இறுதியில் இயேசு கிறிஸ்துவினால் கிரீடம் சூட்டப்பெறுவோம்.

**M.ஸ்டீபன் தங்கப்பா,**
நிறுவனர், COME
Mobile : 9003288852



# ஆத்தும அறுவடை!

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரமும் மகிமையும் உண்டாவதாக. மன்னவன் இயேசுவின் மகத்துவ கிருபையினால் இரண்டாம் 'கட்ட கிறிஸ்துமஸ் பின்தொடர் ஊழியம் இந்தியா முழுமையிலும் உள்ள பணித்தளங்களில் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. சென்னையில் நடைபெற்ற சிறப்பு கூடுகைகளில் மதவாத அமைப்பை சேர்ந்தவர்கள் மூலமாக ஒரு சில இடங்களில் எதிர்ப்புகள் ஏற்பட்டாலும் ஆண்டவர்தாமே தலைமை தாங்கி தளபதியாய் நின்று தடைக்கற்களை படிக்கற்களாக மாற்றி சிறப்பான முறையில் கூடுகைகள் நடத்திட உதவி செய்தார். 26.01.21தேதியன்று பாண்டிச்சேரி மாநிலத்தில் நடைபெற்ற சிறப்பு கூடுகையில் சைதாப்பேட்டை சிஎஸ்ஐ திருச்சபையை சேர்ந்தவர்கள் கலந்துகொண்டு இளம் வாலிப பிள்ளைகளை உற்சாகப்படுத்தினர். கடலூர் மாவட்டத்தில் நடைபெற்ற கிறிஸ்துமஸ் பின்தொடர் கூடுகையில் கலந்துகொண்டவர்களுக்கு கடலூரில் உள்ள திருச்சபை மக்களின் பேராதரவுடன் மளிகைப் பொருட்கள் நிவாரணமாக வழங்கி இரட்சிப்பின் செய்தியை அறிவிக்க கர்த்தர் உதவி செய்தார். இந்தியா முழுமையிலும் இருக்கிற பணித்தளங்களில் C O M E அருட்பணியாளர்களைக் கொண்டு ஆண்டவர் செய்து வருகின்ற அற்புதமான சாட்சிகளில் சிலவற்றை தேவனுடைய நாமத்திற்கு மகிமையாக கீழே பிரசுரிக்கிறேன். வாசித்து நாம் தேவனை மகிமைப்படுத்துவோமாக. ஜே. பிரெட்ரிக்முல்லர்

**மனக் கண்களை திறந்த மன்னவன் இயேசு!**

"என்னுடைய பெயர் கே. கோகுல்ராஜ். நான் சென்னை வியாசர்பாடியில் உள்ள தேபர் நகர் குடிசைப்பகுதியில் வாழ்ந்து வருகின்றேன். நான் பக்தியுள்ள விக்கிரக குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். நாங்கள் குடும்பமாக ஆண்டவராகிய இயேசுவை சொந்த கடவுளாக ஏற்றுக்கொண்டு ஆலயத்திற்கு சென்று வருகிறோம். ஆனாலும் என் தனிப்பட்ட வாழ்க்கையில் ஆண்டவரை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. சபைக்கு சரியாக செல்ல மாட்டேன்.பெற்றோருக்கு நான் கீழ்ப்படியமாட்டேன். எனக்குள் ஒரு பெருமை இருந்தது. யாரையும் மதிக்காமல் வாழ்ந்து வந்தேன். கடந்த ஆண்டின் இறுதி மாதத்தில் நான் வாகனத்தில் சென்று கொண்டிருக்கும் பொழுது எனது வலது கண்ணில் ஒரு காயம் ஏற்பட்டு அதிகமாக வீங்கியது. நான் இதை யாரிடமும் சொல்லவில்லை. நாளாக நாளாக என் கண் பார்வை குறைய ஆரம்பித்தது. நான் மருத்துவர்களிடம் சென்று

காட்டிய பொழுது என் கண்ணிற்கு செல்லும் நரம்புகள் பாதிக்கப்பட்டு சீழ் பிடித்திருப்பதாகச் சொல்லி அதற்கு மருந்து மாத்திரைகளைக் கொடுத்து அனுப்பினார்கள். கடவுள் கையில் தான் இருக்கிறது, எங்கள் கையில் ஒன்றும் இல்லை என்று சொல்லி விட்டார்கள்.மருத்துவமனையிலிருந்து வந்து வீட்டில் கவலையோடு இருந்தேன். அப்பொழுது எங்கள் பகுதிக்கு வரும் ஊழியர்கள் என்னை சந்தித்து நலம் விசாரித்து எனக்காக ஜெபித்தார்கள். எனக்கு ஆலோசனை கொடுத்தார்கள். நானும் அவர்கள் சொன்ன ஆலோசனையை கேட்டு ஆண்டவரிடத்தில் என்னுடைய தவறுகளை எல்லாம் அறிக்கையிட்டு அழுது ஜெபம் செய்தேன். படிப்படியாக என்னுடைய கண் பார்வை தெரிய ஆரம்பித்து, பார்வை முழுமையாகக் கிடைத்துவிட்டது. இத்தகைய நன்மையான காரியங்களை செய்து இருண்ட என்வாழ்வில் ஒளியேற்றிய ஆண்டவர் இயேசுவை என்னுடைய இதயத்தில் ஏற்றுக்கொண்டேன். ஒவ்வொரு வாரமும் தவறாமல் என் பெற்றோருடன் ஆலயம் சென்று ஆண்டவரை ஆராதித்து வருகிறேன். இத்தகைய நன்மை செய்த இயேசு சாமிக்கு கோடி நன்றி".

மிஷனெரிகள்: பவுல்ராஜ்,சாமுண்டீஸ்வரி

## உதிரப்போக்கு நின்றது உவகை வந்தது!

"என்னுடைய பெயர் உஞ்சம்மாள் என்கின்ற சாராள். நான் சென்னை ரிச்சி தெருவில் வசித்து வருகிறேன். எங்கள் பகுதிக்கு ஒவ்வொரு வாரமும் வரும் COME ஊழியர்கள் என்னுடைய வீட்டில் ஜெபக் கூடுகை நடத்துவார்கள். நானும் ஒவ்வொரு வாரமும் தவறாமல் ஆலயம் சென்று வருவேன். எனக்கு கர்ப்பப்பை பிரச்சனை ஏற்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டேன். என்னை பரிசோதித்த மருத்துவர்கள் எனக்கு கர்ப்பப்பையில் கேன்சர் கட்டி இருப்பதாக சொன்னார்கள். எவ்வளவு மருந்து மாத்திரைகள் சாப்பிட்டும் எனக்கு சுகம் கிடைக்கவில்லை. நாளாக நாளாக சிறுநீரில் ரத்தம் கலந்துவர ஆரம்பித்து மிகவும் பெலவீனமடைந்தேன். என்னால் வலியை தாங்க முடியாமல் எப்பொழுதும் நான் அழுது கொண்டிருப்பேன். தற்கொலை செய்துகொண்டு மரித்துவிடலாம் என்று கூட நான் நினைத்ததுண்டு. அச்சமயம் எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்கள் என்னை சந்தித்து தைரியப்படுத்தி எனக்காக ஜெபித்தனர். நாங்கள் அனைவரும் ஆண்டவரிடத்தில் என்னுடைய பிரச்சினையை சொல்லி அழுது ஜெபித்தோம். ஆண்டவர் இயேசு எங்களுடைய விண்ணப்பத்தை கேட்டு எனக்கு பரிபூரண சுகம் கொடுத்தார். என்னுடைய உதிரப்போக்கு நின்றது. இப்பொழுது என்னுடைய உடம்பு தேற ஆரம்பித்திருக்கிறது. நல்ல சுகம் அடைந்திருக்கிறேன். இத்தகைய நன்மை செய்த இயேசுவுக்கு கோடான கோடி நன்றி".

மிஷனெரிகள்: ரூத்,டெய்சி,செந்தில்.

## உண்மை தெய்வத்தைக் கண்டுகொண்டேன்!

"என்னுடைய பெயர் சூரியமூர்த்தி. நான் சென்னை ஆயிரம் விளக்கு பகுதியில் உள்ள அழகிரி நகர் குடிசைப்பகுதியில் வசித்து வருகிறேன். நான் தீவிரமான விக்கிரக பக்தன்.ஒவ்வொரு வருடமும் கோயில்களில் நடைபெறும் விழாக்களிலும் பூஜைகளிலும் தீவிரமாக ஈடுபட்டு வந்தேன். மற்ற மதத்தினரை இழிவாக பார்ப்பேன். எங்கள் பகுதிக்கு வருகிற மற்ற மதத்தினரை குறிப்பாக ஒவ்வொரு வாரமும் வரும் COME ஊழியர்களை பலமுறை கெட்ட வார்த்தைகளால்திட்டி இருக்கிறேன். கூடுகைகள் நடத்தும் பொழுது என்னை அழைப்பார்கள், அவர்களிடம் வாக்குவாதம் செய்து சண்டை போடுவேன். மொத்தத்தில் நான் ஒரு குட்டி சாமியார்.ஆனால் என்னுடைய தாயார் COME ஊழியர்கள் நடத்துகிற கூடுகையில் கலந்துகொண்டு இயேசு சுவாமியை வணங்கி வருகிறார்கள். அவர்கள் என்னிடம் எவ்வளவு சொன்னாலும் நான் எடுத்துக் கொள்ள மாட்டேன். ஒருமுறை நான் கோபத்தில் என்னுடைய கையை ஓங்கி கண்ணாடியில் அடித்ததினால் கையில் பலத்த காயம் ஏற்பட்டு என்னுடைய சுண்டுவிரல் உடைந்து தொங்கி விட்டது. நான் மருத்துவரிடம் சென்று காட்டியபொழுது என்னுடைய விரலை வெட்டி எடுக்க வேண்டும், இனி அது செயல்படாது என்று சொல்லிவிட்டார். நான் மிகவும் துக்கத்தோடு அழுது கொண்டிருந்தபோது எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்களை என்னுடைய தாயார் அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் என்னுடைய பழைய செயல்களையும் நான் அவர்களுக்கு செய்த கெடுதல்களையெல்லாம் மறந்துவிட்டு எனக்காக ஊக்கமாக ஜெபித்தார்கள்.தொடர்ந்து இரண்டு மூன்று முறை வந்து எனக்காக ஜெபித்தார்கள். நானும் கண்ணீரோடு ஆண்டவர் இயேசுவிடத்தில் என்னுடைய தவறுகளை அறிக்கை செய்தேன். பின்னர் ஸ்டான்லி மருத்துவமனையில் நடந்த அறுவை சிகிச்சையும் பலன்தர இப்பொழுது என்னுடைய கை நல்ல முறையில் செயல்படுகிறது. இத்தகைய நன்மைகளை என் வாழ்க்கையில் செய்த இயேசு தான் உண்மை தெய்வம் என்பதை அறிந்து கொண்டேன். என் உயிர் உள்ளவரை அவரையே வணங்குவேன்".

மிஷனெரிகள் : சாமுவேல்,சரோஜா,மகிமைராஜ்

### பரிசுத்தர் தந்த பரிபூரண சுகம்!

"என்னுடைய பெயர் சாந்தி. நான் மதுரையில் உள்ள போடி லைன் குடிசைப்பகுதியில் குடும்பமாக வசித்து வருகிறேன். எனக்கு இரண்டாவது பிரசவத்தின்போது அரசு மருத்துவமனையில் போட்ட தையல் சரியான முறையில் இல்லாததால் அந்த இடத்தில் புண் ஏற்பட்டு எனக்கு வலி ஏற்பட்டது. இதனால் நான் மிகவும் கஷ்டப்பட்டு வந்தேன். என் வீட்டு அருகில் இருக்கிற ஒரு பெண்ணுக்கும் இதே பிரச்சினை ஏற்பட்டு அவர்கள் மரித்து விட்டார்கள். இந்த சூழ்நிலையில் நான் மிகவும் பயந்து கலங்கி கொண்டு மருத்துவரிடம் சென்று சிகிச்சை பெற்று வந்தேன். இருந்தாலும் என் காயம் ஆறவில்லை. அப்போது எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்களிடம் சொன்னேன். அவர்கள் எனக்காக பாரப்பட்டு ஜெபித்து ஜெப எண்ணையும் கொடுத்தார்கள். தொடர்ந்து நானும் ஜெபித்து வந்தேன். இப்போது எல்லா புண்களும் நல்ல முறையில் ஆற ஆண்டவர் உதவி செய்தார். மரித்து விடுவேனோ என்று அஞ்சிக் கொண்டிருந்தேன். ஆண்டவர் எங்கள் விண்ணப்பத்தைக் கேட்டு அந்த காயங்கள் எல்லாம் நன்றாக ஆறவும் முன்பு போல நான் எழுந்து நடமாடவும் என் வேலைகளைச் செய்யவும் எனக்கு உதவி செய்திருக்கிறார். எனக்கு நல்ல சுகம் கொடுத்த இயேசு சாமிக்கு கோடி நன்றி".

**மிஷனெரிகள்: கிங்ஸ்லீ,பெல்ஷியா - மதுரை**

### குச்சி வீட்டை மாற்றி மச்சி வீட்டை தந்த தேவன்!

"என்னுடைய பெயர் ஜெபராணி. கோயம்புத்தூரில் உள்ள காந்திநகர் குடிசைப்பகுதியில் நானும் எனது வயதிற்கு வந்த இரண்டு பெண் பிள்ளைகளும் வசித்து வருகிறோம். எங்கள் வீடு மிகவும் பழுதடைந்த மிகவும் சிறிய ஓலை வீடு. இதில் 3பேர் கூட உட்கார முடியாது. வீட்டில் உட்கார்ந்து பார்த்தால் வானம் தெரியும். அந்த அளவிற்கு மோசமாக சேதமடைந்து இருந்தது. அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம் இதை பார்த்து வயது வந்த இரு பெண்களை வைத்துக்கொண்டு இதுபோன்ற வீட்டில் இருக்கிறாயே என்று கேலியும் கிண்டலும் செய்தார்கள். ஆனாலும் எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்கள் ஒவ்வொரு வாரமும் எங்கள் வீட்டிற்கு வந்து எங்கள் வீட்டில் ஒரு கூடுகை நடத்தி ஜெபம் செய்வார்கள். நாங்களும் கடந்த ஓராண்டு காலமாக எங்களுடைய வீடு கட்டப்பட வேண்டும் என்று ஜெபம் செய்து வந்தோம். ஜெபத்தைக் கேட்ட தேவன் எங்கள் வீட்டை நாங்கள் முன்பு இருந்ததைக் காட்டிலும் பல மடங்கு பெரிதாகக் கட்ட உதவிசெய்தார். ஒவ்வொரு வாரமும் 30க்கும் மேற்பட்டோர் அதில் அமர்ந்து COME ஊழியர்கள் நடத்தும் கூட்டத்தில் கலந்துகொள்ளும்படி ஆண்டவர் கிருபைப் பாராட்டினார். இத்தகைய நன்மையான காரியத்தை செய்த இயேசுவை என் உயிருள்ளவரை மறவேன்".

**மிஷனெரிகள்: குளோரி,ராஜா - கோயம்புத்தூர்**

### நிந்தையைப் போக்கிய நிர்மலன்!

"என்னுடைய பெயர் சரிகா. கோவாவிலுள்ள பஞ்சும் கோவா குடிசைப்பகுதியில் நான் எனது கணவர் மற்றும் இரண்டு மகள்களுடன் குடும்பமாய் வசித்து வருகிறோம். எனது கணவர் தினக்கூலியாக வேலைச் செய்து வருகிறார். அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தில் நாங்கள் குடும்பம் நடத்தி வருகிறோம். இந்த சூழ்நிலையில் என்னுடைய மூத்த மகள் 17 வயதை கடந்த பிறகும் வாலிபப் பருவத்தை அடையாமல் இருந்தது எங்களுக்கு மிகவும் வருத்தத்தையும் வேதனையையும் அளித்தது. எங்களுடைய உறவினர்கள், நண்பர்கள், அக்கம்பக்கத்தினர் எல்லாம் எங்களை விசாரிக்கும் பொழுது ஏன் இன்னும் உன்னுடைய மகள் வாலிபப் பருவத்தை அடையவில்லை என்று கேட்ட கேள்விகளுக்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை. நாங்கள் செல்லாத கோயில்கள் கிடையாது. செய்யாத பூஜை, புனஸ்காரங்கள் இல்லை, இருந்தாலும் என் மகள் வாழ்க்கையில் ஒரு சந்தோஷமும் நிம்மதியும் கிடைக்கவில்லை. இந்த சூழ்நிலையில் அருகில் உள்ள என்னுடைய சகோதரியின் வீட்டிற்கு நான் என்னுடைய மூத்த மகளை அழைத்துக்கொண்டு சென்றேன். அப்போது என்னுடைய சகோதரியின் வீட்டிற்கு ஒரு கணவனும் மனைவியும் வந்தார்கள். நான் அவர்களை யார் என்று என் சகோதரியை கேட்ட பொழுது அவர்கள் COME என்ற ஊழியத்தைச் சேர்ந்த ஊழியர்கள். ஒவ்வொரு வாரமும் எங்கள் பகுதிக்கு வருவார்கள். எல்லாருக்கும் ஜெபம் செய்வார்கள். ஆலோசனை கொடுப்பார்கள். எங்கள் வீட்டிற்கு வந்து ஜெபிக்கிறார்கள். அதன் மூலமாக என்னுடைய வீட்டிலே நிம்மதியும் சந்தோஷமும் இருக்கிறது. நானும் இயேசு சாமியை ஏற்றுக் கொண்டிருக்கிறேன் என்று என்னுடைய சகோதரி சொன்னார்கள். COME ஊழியர்கள் என்னுடைய கண்களில் கண்ணீர் வடிந்துக் கொண்டிருப்பதை பார்த்து என்னை விசாரித்து என்னுடைய மகளுடைய பிரச்சனையை அறிந்துகொண்டு இயேசுவினுடைய அன்பையும் அவருடைய மகத்துவத்தையும் அவர் செய்த அற்புதங்களையும், அதிசயங்களையும் எனக்கு விளக்கிக் கூறி எங்களுக்காக ஜெபித்தார்கள். ஒவ்வொரு நாளும் என்னை செல்போனில் தொடர்பு கொண்டு என் மகளை விசாரித்து

ஜெபித்து வந்தார்கள். இந்த சூழ்நிலையில் கிறிஸ்துமஸ் நிகழ்ச்சி நடைபெறுகிறது நீங்களும் வந்து கலந்துகொள்ளுங்கள் என்று என்னையும் அழைத்தார்கள். நான் சென்று அவர்கள் பேசும்பொழுது கண்ணீரோடு என்னை ஆண்டவர் இயேசுவிடம் ஒப்புக்கொடுத்து ஜெபித்தேன். மறுநாளிலே என்னுடைய மகள் வாலிப பருவத்தை அடைய ஆண்டவராகிய இயேசு உதவி செய்தார். இது எனக்கும் என் குடும்பத்தாருக்கும் மிகப் பெரிய மகிழ்ச்சியை தந்தது. நான் COME ஊழியர்களிடத்தில் சென்று இயேசு என் மகளுக்கு செய்ததை சாட்சியாக சொல்லி நானும் என்னுடைய கணவரும் என்னுடைய பிள்ளைகளும் இயேசு சாமிக்கு எங்களை அர்ப்பணித்து ஜெபித்தோம். வருகின்ற நாட்களில் நாங்கள் ஆலயம் செல்லத் தீர்மானித்துள்ளோம். எங்களுக்காக ஜெபித்துக்கொள்ளுங்கள்".

**மிஷனெரிகள்: சிபுதாஸ், ஜோதி - கோவா**

## பரிசுத்தர் தந்த பரமசுகம்!

"என்னுடைய பெயர் உமா. என்னுடைய கணவர் பெயர் ராஜா. நாங்கள் பெங்களூர் பட்டணத்திலுள்ள பானஸ்வடி என்ற குடிசைப்பகுதியில் குடும்பமாய் வசித்து வருகிறோம். எங்களுக்கு மூன்று பிள்ளைகள் உள்ளனர். கடந்த 2 மாதத்திற்கு முன்பாக எனக்கு திடீரென்று கடுமையான வயிற்று வலி ஏற்பட்டது. என்னால் தாங்க முடியாமல் மிகவும் அவதிப்பட்டு மருத்துவமனைக்கு சென்றேன். மருத்துவமனைக்குச் செல்வதற்கு முன்பாக ஒவ்வொரு வாரமும் எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்களுக்கு போன் செய்து நான் வயிற்று வலியால் மிகவும் அவதிப்பட்டு வருகிறேன். எனக்காக ஜெபம் பண்ணுங்கள் என்று சொன்னேன். ஆண்டவராகிய இயேசு சுவாமியின் மேல் நம்பிக்கை வைத்து அவர்களிடத்தில் நான் ஜெபிக்க சொல்லி இருந்தேன். நான் மருத்துவமனைக்கு சென்று பார்த்தபோது என் வயிற்றில் கட்டி இருப்பதாகவும், அதை அறுவை சிகிச்சை மூலம் அகற்ற வேண்டும் என்று சொன்னார்கள். சில மாதங்களுக்கு முன்பாக என் தாய்க்கும் இதேபோல வயிற்றில் கட்டி இருக்கிறது என்று சொல்லி பரிசோதனையில் அது கேன்சர் கட்டி என்று சொன்னார்கள். அதனால் என் தாய் கலங்கி மிகவும் வேதனையோடு அவதிப்பட்டு வருகிறார்கள். எனக்கும் அதே பிரச்சனை வந்துவிடுமோ என கலங்கிநின்றேன். அறுவை சிகிச்சை செய்ய அதிக பணம் தேவைப்படும். அந்த பணத்தை நான் என்ன செய்வது, எங்கு செல்வது என்று யோசித்து கொண்டு இருந்தேன். மீண்டும் நான் வீட்டிற்கு வந்தபோது COME ஊழியர்கள் என்னைசந்தித்து எனக்கு ஆறுதல் சொல்லி எனக்காக ஜெபித்தார்கள். தொடர்ந்து செல்போனிலும் எனக்காக ஜெபித்து வந்தார்கள். பின்பு நாங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஜெபித்து ஒரு முடிவு எடுத்து எங்களுடைய சொந்த ஊராகிய திருவண்ணாமலைக்குச்சென்று அங்கு இருக்கின்ற அரசு மருத்துவமனையில் அறுவை சிகிச்சை செய்ய இயேசு சாமி உதவி செய்தார். சிகிச்சையின் முடிவில் இது கேன்சர் கட்டி அல்ல. சாதாரண கட்டி என்றும் அவர்கள் அறிவித்தனர். இப்பொழுது நான் மீண்டுமாய் பெங்களூர் பட்டிணத்திற்கு திரும்பி உள்ளேன். நான் பரிபூரண சுகத்தோடு இருக்கிறேன். இத்தகைய நன்மையான காரியங்களை செய்த இயேசு சுவாமி தான் உண்மை தெய்வம். அவரையே வணங்குவேன்".

**மிஷனெரிகள் : ரமணி,சஞ்சய், மீனா- பெங்களூர்**

## பசியைப் போக்கிய பரமனின் அருள்!

"என் பெயர் லட்சுமி. என்னுடைய கணவர் பெயர் கேசவன். எங்களுக்கு இரண்டு பிள்ளைகள் உள்ளனர்.நாங்கள் பெங்களூர் பட்டணத்திலுள்ள ராமமூர்த்தி நகர் குடிசைப்பகுதியில் வசித்து வருகிறோம்.நாங்கள் பூர்வீகமாக விக்கிரகக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். என் கணவர் அதிகமாக குடிப்பார்.இதனால் எங்கள் வீட்டில் எப்போதும் சண்டை நடக்கும். சமாதனம், நிம்மதி என்றால் என்ன என்று எங்களுக்கு எதுவும் தெரியாது. இந்நிலையில் COME ஊழியர்கள் எங்கள் பகுதிக்கு வரும்போது எங்களையும் சந்தித்தார்கள். அப்போது என் குடும்ப சூழ்நிலையை அவர்களிடம் பகிர்ந்து கொண்டேன். எனக்காக ஜெபித்தார்கள். பிறகு ஒரு தெலுங்கு வேதாகம புத்தகத்தைஎன்னிடம் கொடுத்து அதை படிக்கச் சொன்னார்கள். நானும் என் பிள்ளைகளும் ஒவ்வொரு நாளும் இரவு நேரத்தில் பைபிளை படித்து ஜெபம் செய்வோம். கடந்த வாரம் எங்கள் வீட்டில் சமைப்பதற்கும் சாப்பிடுவதற்கும் ஒன்றும் இல்லை. ஆனாலும் நாங்கள் வழக்கம்போல வேத புத்தகத்தை வாசித்து ஜெபம் செய்து பட்டினியாக இருக்கிறோம் என்று இயேசு சாமியிடம் சொல்லி ஜெபித்து முடித்தோம். என்ன ஆச்சரியம்! திடீரென்று பக்கத்து வீட்டிலிருந்தவர்கள் நாங்கள் எல்லாரும் சாப்பிட்டு மீதியாகதக்கதாக உணவுகளை கொண்டு வந்து கொடுத்தார்கள். அப்பொழுது தான் இயேசுசாமி விண்ணப்பத்திற்கு உடனே பதில் தருகிற கடவுள் என்று அறிந்துக்கொண்டோம். இப்பொழுது தினமும் முன்பை காட்டிலும் அதிகமாக ஜெபிக்க ஆரம்பித்திருக்கிறோம். வருகின்ற நாட்களில் நாங்கள் குடும்பமாக ஆலயம் செல்ல இருக்கிறோம். எங்களுக்காக ஜெபித்துக் கொள்ளுங்கள்".

மிஷனெரிகள் : சசிகலா, ராதா, நிர்மல்- பெங்களூர்

## புற்றுநோயை போக்கினார் புது வாழ்வு தந்தார்!

"எனது பெயர் பிரனேஷ். நான் விக்கிரக வைராக்கியம் நிறைந்த குடும்பத்தைச் சேர்ந்தவன்.நான் கர்நாடக மாநிலம் ராய்ச்சூர் பகுதியில் உள்ள திம்மபூர்பேட் குடிசைப்பகுதியில் வசித்து வருகிறேன். நான் ஒரு மருத்துவமனையில் வார்டு பாயாக பணியாற்றி வருகிறேன். எனக்கு இரவு பகல் என்று மாறி மாறி வேலை வரும். நான் அந்த சமயங்களில் புகையிலையைக்கும் மதுவிற்கும் அடிமையாகி விட்டேன். நான் என் குடும்பத்தில் யாருக்கும் பயப்படுவது கிடையாது. இந்த சூழ்நிலையில் ஒரு நாள் நான் மிகவும் பெலவீனமடைந்தேன். என்னை மருத்துவமனைக்கு அழைத்து சென்றனர். மருத்துவர்கள் பரிசோதித்து பார்த்தபொழுது என்னுடைய வாயிலும் தொண்டையிலும் புற்றுநோய் இருப்பதை கண்டுபிடித்து எனக்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். நான் மிகவும் பயந்து போய் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு அழுது புலம்பிக் கொண்டு இருந்தேன். அந்த சமயத்தில் ஒவ்வொரு வாரமும் எங்கள் பகுதிக்கு வரும் COME ஊழியர்கள் என்னை விசாரித்து என் நிலைமையை அறிந்து கொண்டு எனக்கு ஆறுதலான வார்த்தைகளைச் சொன்னார்கள். இயேசுவினுடைய அன்பையும், மகத்துவத்தையும், அவருடைய வல்லமையை எடுத்து சொல்லி எனக்காக ஜெபித்தார்கள். அவர்கள் ஜெபிக்கும் போதே எனக்குள் வல்லமையும், நிம்மதியும் பரவுவதை நான் உணர்ந்து கொண்டேன். நான் தொடர்ந்து அவர்களை தொடர்பு கொண்டு எனக்காக ஜெபிக்க சொன்னேன். நான் ஒவ்வொரு நாளும் என்னுடைய பாவங்களை அறிக்கை செய்து அதையெல்லாம் விட்டுவிட்டு ஆண்டவருடைய பிள்ளையாய் மாறி ஆண்டவரை வழிபட ஆரம்பித்தேன். இயேசு சாமி எங்கள் அனைவரின் விண்ணப்பத்தையும் கேட்டு எனக்கு நல்ல முறையில் அறுவை சிகிச்சை செய்யவும், நான் பரிபூரண சுகமடைந்து மீண்டுமாய் பழையபடி வாழவும், வேலைக்கு செல்லவும் எனக்கு உதவி செய்தார். புது வாழ்வுதந்த இயேசு சுவாமிக்கு கோடான கோடி நன்றி".

**மிஷனெரிகள்: மாற்கு,சாராள்- ராய்ச்சூர்**

## வாழ்வை மாற்றிய வானவர் இயேசு!

"எனது பெயர் சதீஷ்.நான் விசாகப்பட்டிணத்தில் உள்ள அம்பேத்கார் நகர் குடிசைப்பகுதியில் வசித்து வருகிறேன். நான் ஒரு கிறிஸ்தவன். ஆனால் எப்போதாவது தான் ஆலயம் செல்வேன். ஆலயம் செல்வதில் எனக்கு விருப்பமில்லை. எனவே நான் திருமுழுக்கும் எடுக்கவில்லை. ஒவ்வொரு நாளும் மிகவும் கஷ்டத்தில் தான் என் குடும்பத்தை நான் நடத்தி வந்தேன். இந்த சூழ்நிலையில் எங்கள் பகுதிக்கு புதிதாக வருகின்ற COME



ஊழியர்கள் என் வீட்டிற்கு வந்து என்னை சந்தித்தார்கள். ஏன் ஆலயம் செல்லவில்லை என்று என்னிடத்தில காரணத்தைக்கேட்டு ஆலயத்திற்குச் செல்லும்படி ஆலோசனைக் கொடுத்து ஜெபித்தார்கள். நாங்கள் தொடர்ந்து ஆலயம் சென்றோம். அதன் தொடர்ச்சியாக இந்த வருடத்தில் 11.12.2020 அன்று திருமுழுக்குப் பெற்றோம். இப்பொழுது நாங்கள் ஜெபிக்கவும், வேதம் வாசிக்கவும் ஆரம்பித்துள்ளோம். எங்களுடைய வீட்டினுடைய நிலைமை மாறி உள்ளது. எங்கள் குடும்பத்தில் இருந்த வறுமையும், தரித்திரமும் ஒழிந்தது. நாங்கள் மிகவும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறோம். இத்தகைய மகிழ்ச்சியான வாழ்க்கையை அளித்த இயேசு சுவாமிக்கும் வழிகாட்டிய COME ஊழியர்களுக்கும் நன்றி".

**மிஷனெரிகள்: ராஜ்குமார்,ராஜேஸ்வரி - விசாகப்பட்டிணம்**

**உங்கள் அன்பின் காணிக்கைகளை எங்கள் வங்கிக் கணக்கு வாயிலாகவும் அனுப்பலாம்**

| | |
|---|---|
| எங்கள் வங்கியின் பெயர் | : Indian Bank |
| கணக்கின் பெயர் | : CHRISTIAN OUTREACH FOR MISSION AND EVANGELISM |
| கணக்கு எண் | : SB: 400614915 |
| கிளை | : Kellys, Branch Code : 756 |
| IFSC | : IDIB000K071 |
| எங்கள் வங்கியின் பெயர் | : State Bank of India |
| கணக்கின் பெயர் | : CHRISTIAN OUTREACH FOR MISSION AND EVANGELISM |
| கிளை | : I.C.F. Branch, Branch Code : 13065 |
| கணக்கு எண் | : Current : 37595472369 |
| IFSC | : SBIN0013065 |

இந்தக் கணக்கில் பணம் செலுத்தியதும் தயவு செய்து எங்களுக்குத் தெரியப் படுத்துங்கள். அந்தந்த மாதத்திற்குள் தெரியப்படுத்தினால் உங்கள் பணம் ஊழியத்தின் கணக்கில் சேர்ந்ததை உறுதிப்படுத்திக் கொள்ளவும், உங்களுக்கு எங்கள் அலுவலக ரசீது அனுப்பவும் உதவியாக இருக்கும்.

**நன்றி!!!**

### கர்த்தருக்குள் பிரியமான COME ஊழியத்தின் அருட்கொடையாளர்களுக்கு ஒரு முக்கிய அறிவிப்பு

ஆன்லைன் வங்கி சேவை மூலமாக எங்களுக்கு காணிக்கை அனுப்புகிற அருட்கொடையாளர்கள் தயவு செய்து தங்களுடைய தொலைபேசி எண் மற்றும் மின்னஞ்சல் முகவரி ஆகியவைகளை ரிமார்க்ஸ் (REMARKS) இடத்தில் எழுதி தெரியப்படுத்தினால் வேகமாக இரசீது அனுப்புவதற்கு உதவியாக இருக்கும். மேலும் உங்களுக்கு இது குறித்து தகவல் தேவைப்படுமானால் கீழ்காணும் தொலைபேசி எண்ணையும் மின்னஞ்சல் முகவரியையும் நீங்கள் தொடர்பு கொள்ளலாம்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

Mrs. S. மேரி பாத்திமா

தொலைப்பேசி எண் : 8939000676, 9840537176

மின்னஞ்சல் முகவரி (E MAIL) : comeministries@outlook.com

## வருந்துகிறோம்!



இன்னலுறும் அருட்பணியாளர்களின் இன்னலை போக்கி அவர்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியையும், சந்தோஷத்தையும், ஆரோக்கியத்தையும் அளிக்கும் நோக்கத்துடன் MUT என்ற தொண்டு நிறுவனத்தை உருவாக்கி அனேக அருட்பணியாளர்களின் தேவைகளை பூர்த்தி செய்த அருமையான ஐயா ஜே.ஜே. இரத்தினகுமார் அவர்கள் இம்மண்ணுலக இறைப்பணியை முடித்து விண்ணுலக வாழ்விற்கு சென்றிருப்பதால், ஆண்டவருக்கு நன்றியையும், COME குடும்பத்தின் சார்பாக நாங்கள் ஆழ்ந்த வருத்தத்தையும் இரங்கலையும் தெரிவித்துக் கொள்கிறோம். அவரது குடும்பத்தினருக்கு ஆறுதலின் தேவன் தாமே ஆறுதல் அருள்வாராக.

## நாட்டு நடப்பு !

- **முதலமைச்சரின் நேரடி உதவி மையம் 1100 திறப்பு**

  இந்த உதவி மையம் காலை 7 மணி முதல் இரவு 10 மணி வரை பொது மக்கள் நேரடியாகவும் மின்னஞ்சல் மூலமாகவும், கைபேசி மூலமாகவும் 24 மணி நேரமும் பொதுமக்கள் தங்கள் குறைகளை தெரிவிக்கலாம்.

- **இரண்டு மடங்கு கட்டணம்**

  பிப்ரவரி 15 இரவு முதல் பாஸ்ட்ராக் ஸ்டிக்கர் ஒட்டாத வாகனங்களுக்கு இரண்டு மடங்கு கட்டணம் வசூலிக்கப்படும்.

- மகராஷ்ரா மற்றும் ராஜஸ்தானிலும் பெட்ரோல் விலை ரூபாய் 100 கடந்தது.

- **சுப்ரீம் கோர்ட்டு உத்தரவு**

  அரசு பதவி உயர்வுக்கான இட ஒதுக்கீட்டை ரத்து செய்து, மதிப்பெண் அடிப்படையில் பதவி உயர்வு வழங்க வேண்டும். தமிழக அரசுக்கு சுப்ரீம் கோர்ட்டு உத்தரவு.

- **கொரோனா பலி எண்ணிக்கைஇந்தியாவில் 100க்கு கீழாக சரிந்தது.**

- **மத்திய சட்ட மந்திரி அறிவிப்பு**

  உள்நாட்டு சட்டங்களுக்கு கட்டுப்படாவிட்டால் சமூக வலைதளங்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் மத்திய சட்ட மந்திரி அறிவிப்பு.

- **பனிப்பாறை உருகியது**

  உத்தரகாண்ட் மாநிலத்தில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கில் நந்தாதேவி பனிப்பாறையின் ஒரு பகுதி உருகியதால் 58 பேர் மரணமடைந்தனர். அனேகர் காணாமல் போயுள்ளனர்.

Registered with Registrar of Newspapers for India under RNI No: TNTAM/2019/77718.
Postal Regn. No. TN/TBM/212/2019-21.
Date of Publication 22nd of every month. Date of Posting 25th and 26th of every month.
Posted at R.M.S. / 1 Patrica Channel, Egmore, Chennai 600 008. Posted on 26.02.2021






Return requested to :
**COME POST**
No. 9/5A, Bajanai Koil First Street,
Villivakkam, Chennai-600 049.
India. Phone : 044-26171846
Cell : 8951414480
E-mail: comeministries@gmail.com

To

16 / CH/59
MRS.SUGIRTHAM JOHN
S-4, SUBHIKSHA FLATS,
VYASAR STREET,
TAMBARAM EAST
CHENNAI-600 059

Published by Wesley Navaraj D. Printed by D. Devavaram on behalf of C ... ngelism.
Printed at Meipporul Achakam, 278, K. H. Road, Ayar ...
Published from 9/5A, Bajanai Koil First Street, Villivakkam, Chennai 600 ... avaraj D.